ශ්‍රී ලංකා විභාග දෙපාර්තමේන්තුව
இலங்கைப் பரீட்சைத் திணைக்களம்
Department of Examinations, Sri Lanka

அத்‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தரப்) பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ඉතිහාසය I (I කොටස)
வரலாறு I (பகுதி I)
History I (Part I)

**25 T I**

පැය තුනයි
மூன்று மணித்தியாலம்
*Three hours*

இலங்கை வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி. 1978 வரை

சுட்டெண்: .................................

**அறிவுறுத்தல்கள்:**

* இப்பகுதியில் **40** வினாக்கள் உள்ளன. **எல்லா** வினாக்களுக்கும் **இவ்வினாப்பத்திரத்திலேயே** விடை எழுதுக.
* ஒவ்வொரு வினா தொடர்பாக **ஐவைந்து** விடயங்கள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** சரியானது. அந்த வினாவின் சரியான விடையைத் தெரிவு செய்து, அதனை இங்கு குறிப்பிடப்பட்ட **அறிவுறுத்தல்களுக்கமைய உமது விடையைக் குறித்துக் காட்டுக.**
* இப்பகுதிக்கு **40** புள்ளிகள் வழங்கப்படும்.
* **இரண்டு** பகுதிகளுக்கும் வழங்கப்பட்டுள்ள நேரம் **மூன்று மணித்தியாலங்களாகும்.** உமது விடைத்தாள்களை ஒப்படைக்கும் பொழுது **பகுதி I** இற்கான விடைகளை எழுதிய பின்னர், **பகுதி II** இற்கான விடைத்தாளுடன் **இணைத்து ஒப்படைக்க வேண்டும்.**

## பகுதி I

● **1 - 5** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து** பெயர்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அப்பெயர்களுள் **ஒன்று** ஏதோ காரணத்தினால் ஏனையவற்றுடன் **பொருந்தாது. பொருந்தாத** அப்பெயரை இனங்கண்டு, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**1.** (1) சிலப்பதிகாரம் (2) மணிமேகலை (3) பதிற்றுப்பத்து (4) பட்டினப்பாலை (5) யாழ்ப்பாண வைபவமாலை (.........)

**2.** (1) பூபதி (2) பூபாலன் (3) கஹபதி (4) படவீபதி (5) பிருதிவீஸ்வர (.........)

**3.** (1) உபோசதகர (2) சேதியகர (3) போதிகர (4) சூதிகர (5) பிரதிமாகர (.........)

**4.** (1) யான் மற்சுயிகர் (2) பிலிப்பூஸ் போல்டேஸ் (3) ரிக்குளொப் வான் ஹுன்ஸ் (4) விலெம் வான் இம்ஹொஃப் (5) யான் சுரோயிடர் (.........)

**5.** (1) வன்னி (2) சபரகமுவ (3) நுவரகலாவிய (4) தம்பன்கடுவ (5) ஹத் கோரலே (.........)

● **6 - 10** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றிலும் **ஐந்து சோடிப் பெயர்கள்** தரப்பட்டுள்ளன. அவற்றுள் ஒரு சோடியிலுள்ள பெயர்கள் ஒன்றுடன் ஒன்று **பொருந்தவில்லை. பொருந்தாத** அச்சோடியை இனங்கண்டு அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**6.**
(1) உபதிஸ்ஸகாம - கடம்ப நதி
(2) உருவெலகாம - ஜஜ்ஜர நதி
(3) விஜிதகாம - மஹாவாலுகா நதி
(4) தீககாம - கால்ஹ நதி
(5) கஜரகாம - கப்பகந்தர நதி (.........)

**7.**
(1) சாரார்த்தசங்கிரஹ - புத்ததாச
(2) அமாவதுர - குருலுகோமி
(3) சிதத் சங்கரா - வேதேஹ தேர
(4) கவிசிலுமின - இரண்டாம் பராக்கிரமபாகு
(5) சரசோதிமாலை - மயில்வாகனம் (.........)

[பக். 2 ஐப் பார்க்க

8. (1) ஏழாம் புவனேகபாகு - தொம் லூயி
(2) தர்மபால - தொம் ஜுவான்
(3) யமசிங்க பண்டார - தொம் பிலிப்
(4) குசுமாசனதேவி - தோனா கதரீனா
(5) கோணப்பு பண்டார - ஒஸ்திரியாவின் தொம் ஜுவான் (.........)

9. (1) டி மியூரன் ஆணைக்குழு - 1796 க்கு முன் நிலவிய பழைய ஏற்பாட்டின் மீளாக்கம்
(2) மோர்கன் ஆணைக்குழு - பொதுக்கல்வித் திணைக்களம் நிறுவியமை
(3) ரிடெல் ஆணைக்குழு - பல்கலைக்கழக கல்லூரி நிறுவியமை
(4) டொனமூர் ஆணைக்குழு - சர்வஜன வாக்குரிமை வழங்கியமை
(5) சோல்பரி ஆணைக்குழு - மந்திரிசபை முறையை அறிமுகஞ் செய்தமை (.........)

10. (1) இறப்பர் ஆராய்ச்சி நிறுவனம் - அகலவத்த
(2) தேயிலை ஆராய்ச்சி நிறுவனம் - தலவாக்கல
(3) தெங்கு ஆராய்ச்சி நிறுவனம் - லுணுவில
(4) நெல் ஆராய்ச்சி நிறுவனம் - வத்தலகொட
(5) சிறகவரை ஆராய்ச்சி நிறுவனம் - ஹோரைத்கொட (.........)

- **11 - 15** வரையுள்ள ஒவ்வொரு வினாவிலும் சில பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் ஆகியவற்றின் தொகுதிகள் **X, Y** என்னும் நிரல்களில் தரப்பட்டுள்ளன. **Y** நிரலில் தரப்பட்டுள்ள பெயர்கள் / கூற்றுகள் / திகதிகள் **X** நிரலில் தரப்பட்டுள்ளவற்றுடன் ஏதோ ஒரு வகையில் தொடர்புபட்டவை. ஆனால் அவை சரியான தொடர் ஒழுங்கில் **தரப்படவில்லை. Y** நிரலில் உள்ளவற்றை **X** நிரலில் உள்ளவற்றுக்கேற்பச் சரியாக ஒழுங்குபடுத்தும்போது கீழே தரப்பட்டுள்ள ஐந்து சேர்மானங்களுள் **ஒன்று** சரியானதாகும். சரியான சேர்மானத்தின் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

11.

| X | Y |
|---|---|
| (i) பண்டுவாசுதேவ | A சோமாதேவி |
| (ii) காக்கவண்ண திஸ்ஸ | B வெங்கட ரங்கம்மாள் |
| (iii) வட்டகாமினி அபய | C பத்தகச்சானா |
| (iv) நிசங்கமல்லன் | D விகாரமகாதேவி |
| (v) ஸ்ரீ விக்கிரம ராஜசிங்கன் | E கல்யாணவதி |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

12.

| X | Y |
|---|---|
| (i) அநுராதபுரம் | A முதலாம் புவனேகபாகு |
| (ii) யாழ்ப்பாணம் | B இரண்டாம் புவனேகபாகு |
| (iii) யாப்பகூவ | C நான்காம் புவனேகபாகு |
| (iv) குருநாகல் | D விஜய கூழங்கை சக்கரவர்த்தி |
| (v) கம்பளை | E பண்டுகாபய |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

13.

| X | Y |
|---|---|
| (i) சூரதிஸ்ஸ | A மாகன் |
| (ii) வங்கநாஸிக திஸ்ஸ | B கரிகால சோழன் |
| (iii) முதலாம் சேனன் | C சேன - குத்திக |
| (iv) பராக்கிரம பாண்டியன் | D ஸ்ரீமாற ஸ்ரீவல்லவன் |
| (v) இரண்டாம் பராக்கிரமபாகு | E சந்திரபானு |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

14.

| X | Y |
|---|---|
| (i) 1833 | A வடமத்திய மாகாணம் |
| (ii) 1845 | B சபரகமுவ மாகாணம் |
| (iii) 1873 | C மேல் மாகாணம் |
| (iv) 1886 | D வடமேல் மாகாணம் |
| (v) 1889 | E ஊவா மாகாணம் |

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

[பக். 3 ஐப் பார்க்க

15. X / Y

(i) ஹென்றிவோர்ட் — A கந்தளாய் குளம்
(ii) ஹேர்குயூலிஸ் ரொபின்ஸன் — B நாச்சதூவ வாவி
(iii) வில்லியம் கிரெகறி — C கலா வாவி
(iv) ஆர்தர் கோடன் — D இறக்காமம் வாவி
(v) வெஸ்ட் றிஜ்வே — E திஸ்ஸமகாராம வாவி

(1) EDABC (2) DEACB (3) CBDAE (4) CDAEB (5) BEADC (.........)

- **16 - 20** வரையுள்ள ஒவ்வொரு வினாவினதும் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**16. மேல்வருவனவற்றில் தம்பதெனிய காலத்தில் எழுதப்பட்ட நூல்கள் அடங்கிய தொகுதி யாது?**
(1) தர்மபிரதீபிகா, புதுசரண, ஹத்தவனகல்ல விகாரவம்ச, பூஜாவலி, சத்தர்மரத்னாவலி
(2) புதுசரண, ஹத்தவனகல்ல விகாரவம்ச, பூஜாவலி, சத்தர்மரத்னாவலி, தைவக்ஞ காமதேனு
(3) புதுசரண, ஹத்தவனகல்ல விகாரவம்ச, பூஜாவலி, சத்தர்மரத்னாவலி, காவ்யசேகர
(4) ஹத்தவனகல்ல விகாரவம்ச, பூஜாவலி, சத்தர்மரத்னாவலி, காவ்யசேகர, நிகாய சங்கிரஹய
(5) ஹத்தவனகல்ல விகாரவம்ச, பேசஜ்ய - பஞ்சுஸ, பூஜாவலி, சத்தர்மரத்னாவலி, தைவக்ஞ காமதேனு (.........)

**17. மேல்வருவனவற்றுள் லம்பகண்ண வம்சத்து அரசர்களின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையிற் குறிப்பிடும் தொகுதி யாது?**
(1) வசப, முதலாம் கஜபாகு, மஹல்லக நாக, வங்கநாஸிக திஸ்ஸ, பாடிக திஸ்ஸ
(2) வசப, மஹல்லக நாக, முதலாம் கஜபாகு, வங்கநாஸிக திஸ்ஸ, பாடிக திஸ்ஸ
(3) வசப, வங்கநாஸிக திஸ்ஸ, முதலாம் கஜபாகு, மஹல்லக நாக, பாடிக திஸ்ஸ
(4) வங்கநாஸிக திஸ்ஸ, வசப, மஹல்லக நாக, முதலாம் கஜபாகு, பாடிக திஸ்ஸ
(5) வசப, முதலாம் கஜபாகு, வங்கநாஸிக திஸ்ஸ, பாடிக திஸ்ஸ, மஹல்லக நாக (.........)

**18. மேல்வருவனவற்றுள் கண்டி இராச்சியத்தின் இறுதி மன்னர்களின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையிற் கொண்ட தொகுதி**
(1) ஸ்ரீ விஜய ராஜசிங்க, நரேந்திரசிங்க, கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்க, ராஜாதி ராஜசிங்க, ஸ்ரீ விக்கிரம ராஜசிங்க
(2) நரேந்திரசிங்க, ஸ்ரீ விஜய ராஜசிங்க, கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்க, ராஜாதி ராஜசிங்க, ஸ்ரீ விக்கிரம ராஜசிங்க
(3) நரேந்திரசிங்க, ஸ்ரீ விஜய ராஜசிங்க, ராஜாதி ராஜசிங்க, கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்க, ஸ்ரீ விக்கிரம ராஜசிங்க
(4) ராஜாதி ராஜசிங்க, நரேந்திரசிங்க, ஸ்ரீ விஜய ராஜசிங்க, கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்க, ஸ்ரீ விக்கிரம ராஜசிங்க
(5) நரேந்திரசிங்க, ராஜாதி ராஜசிங்க, ஸ்ரீ விஜய ராஜசிங்க, கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்க, ஸ்ரீ விக்கிரம ராஜசிங்க
(.........)

**19. மேல்வருவனவற்றுள் இலங்கைத் தேசாதிபதிகளின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையிற் குறிப்பிடுவது எது?**
(1) ஹென்றி மங்க் - மேசன் - மூர், சோல்பரி, வில்லியம் கொபல்லாவ, ஒலிவர் குணதிலக
(2) ஹென்றி மங்க் - மேசன் - மூர், வில்லியம் கொபல்லாவ, சோல்பரி, ஒலிவர் குணதிலக
(3) சோல்பரி, ஹென்றி மங்க் - மேசன் - மூர், ஒலிவர் குணதிலக, வில்லியம் கொபல்லாவ
(4) ஹென்றி மங்க் - மேசன் - மூர், சோல்பரி, ஒலிவர் குணதிலக, வில்லியம் கொபல்லாவ
(5) சோல்பரி, ஹென்றி மங்க் - மேசன் - மூர், வில்லியம் கொபல்லாவ, ஒலிவர் குணதிலக (.........)

**20. மேல்வருவனவற்றுள் இலங்கையில் நிதியமைச்சர்களின் பெயர்களைச் சரியான காலக்கிரம வரிசையிற் குறிப்பிடுவது எது?**
(1) J. R. ஜயவர்த்தன, M. D. H. ஜயவர்த்தன, ஸ்டான்லி சொய்சா, ∴பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயக்கா, U. B. வன்னிநாயக்கா
(2) J. R. ஜயவர்த்தன, M. D. H. ஜயவர்த்தன, ∴பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயக்கா, ஸ்டான்லி சொய்சா, U. B. வன்னிநாயக்கா
(3) J. R. ஜயவர்த்தன, ∴பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயக்கா, M. D. H. ஜயவர்த்தன, ஸ்டான்லி சொய்சா, U. B. வன்னிநாயக்கா
(4) M. D. H. ஜயவர்த்தன, J. R. ஜயவர்த்தன, ∴பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயக்கா, ஸ்டான்லி சொய்சா, U. B. வன்னிநாயக்கா
(5) J. R. ஜயவர்த்தன, M. D. H. ஜயவர்த்தன, ஸ்டான்லி சொய்சா, U. B. வன்னிநாயக்கா, ∴பீலிக்ஸ் டயஸ் பண்டாரநாயக்கா

(.........)

[பக். 4 ஐப் பார்க்க

05167

- **21 - 25** வரையுள்ள எல்லா வினாக்களுக்கும் ஒரு தலைப்பின் கீழ் **ஐந்து** விடயங்கள் வீதம் தரப்பட்டுள்ளன. அவ்விடயங்களுள் **ஒன்று உரிய தலைப்பிற்குப் பொருந்தாதுள்ளது.** அப்பொருந்தாததைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

**21. உருகுணை**

(1) மகாநாகன் மாகமவிலிருந்து உருகுணையை ஆட்சி புரிந்தான்.
(2) மகாநாகனுக்குப் பின்பு யட்டால திஸ்ஸ ஆட்சி அதிகாரம் பெற்றான்.
(3) சகோதரர்களான கதரகம அரசர்கள் பதின்மரையும் கோட்டாபய கொலை செய்தான்.
(4) உருகுணையிலுள்ள சேரு, சோம என்னும் சிற்றரசுகளைக் காக்கவண்ண திஸ்ஸ கைப்பற்றினான்.
(5) திருமண உறவின் மூலம் துட்டகாமினி கல்யாணியை உருகுணையோடு இணைத்துக் கொண்டான். (.........)

**22. இராசரட்டையிற் சோழரின் ஆட்சி**

(1) ஐந்தாம் மகிந்தனைக் கைப்பற்றிய சோழர் அவனைக் கைதியாகத் தென்னிந்தியாவிற்குப் பிடித்துச் சென்றனர்.
(2) கி.பி. 1017 இல் இலங்கையின் வடபகுதி சோழப் பேரரசின் பிரிவாகியது.
(3) காலிங்க மாகனே இலங்கையின் இறுதிச் சோழ அரசனாவான்.
(4) சோழரின் ஆட்சிக்குள் அடங்கிய பகுதி மும்முடிச்சோழ மண்டலம் எனப்பட்டது.
(5) சோழ நிர்வாகத்தின் பிரதான நிலையம் ஜனநாதமங்கலம் எனப்பட்டது. (.........)

**23. இரண்டாம் பராக்கிரமபாகு**

(1) இரண்டாம் பராக்கிரமபாகு தம்பதெனிய காலத்தின் மிகச் சிறந்த அரசனாவான்.
(2) இரண்டாம் பராக்கிரமபாகு செங்கோவைத் தோற்கடித்தான்.
(3) 'கலிகால சாகித்திய சர்வக்ஞ பண்டிதன்' என்னும் சிறப்புப் பட்டத்தை வழங்கி இரண்டாம் பராக்கிரமபாகுவைக் கௌரவப்படுத்தினார்கள்.
(4) இரண்டாம் பராக்கிரமபாகு புனித தந்ததாதுவைப் பெலிகலவிலிருந்து தம்பதெனியவிலுள்ள தலதா மாளிகைக்கு எடுத்துச் சென்றான்.
(5) இரண்டாம் பராக்கிரமபாகு தம்பதெனிய கதிகாவத என்பதைப் பிரகடனப்படுத்தினான். (.........)

**24. பிரித்தானியருக்கெதிரான கிளர்ச்சி, 1817-18**

(1) ஊவா வெல்லசவில் ஆரம்பமானது.
(2) ஹஜ்ஜி மரிக்காரை மடிகை முகாந்திரமாக நியமித்தமையே கிளர்ச்சிக்கான உடனடிக் காரணமாகும்.
(3) கெப்பிற்றிப்பொல கிளர்ச்சியினை ஏற்படுத்திய பிரதானமான தலைவர்களில் ஒருவனாவான்.
(4) கிளர்ச்சியின் பின்பு ஜோன் டொய்லி கண்டியின் அரசாங்க அதிபராக நியமிக்கப்பட்டார்.
(5) கிளர்ச்சியாளர்களின் தலைவர்கள் பிரித்தானிய அரசாங்கத்துக்கு எதிரான துரோகிகள் என்று பிரகடனப்படுத்தப்பட்டனர். (.........)

**25. நிறைவேற்று அதிகாரமுடைய ஜனாதிபதியின் அதிகாரங்களும் கடமைகளும்**

(1) படைகளின் கட்டளைத் தலைவர்
(2) பிரதம மந்திரி, அமைச்சர்கள் ஆகியோரை நியமித்தல்
(3) மந்திரிசபைக் கூட்டங்களில் பங்கு கொள்ளாமை
(4) வெளிநாடுகளின் அலுவலர்களின் நியமனம்
(5) பாராளுமன்றத்தைக் கலைத்தல் (.........)

[பக். 5 ஐப் பார்க்க

● **26 - 30** வரையுள்ள வினாக்கள் ஒவ்வொன்றுக்கும் **(A), (B), (C), (D)** என்னும் நான்கு மாற்று விடைகள் தரப்பட்டுள்ளன. அவற்றுள் **ஒன்று** அல்லது **பல** சரியான விடைகளாகும். சரியான விடையை அல்லது விடைகளைத் தெரிவுசெய்து,

**(A)** யும் **(B)** யும் மட்டும் சரியாயின் .................. **1** எனவும்
**(B)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் .................. **2** எனவும்
**(C)** யும் **(D)** யும் மட்டும் சரியாயின் .................. **3** எனவும்
**(A)** யும் **(C)** யும் மட்டும் சரியாயின் .................. **4** எனவும்

ஒரு விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு மேற்பட்ட** விடைகள் சரியாயின் ... **5** எனவும் **அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| **அறிவுறுத்தல்களின் சுருக்கம்** | | | | |
|---|---|---|---|---|
| **1** | **2** | **3** | **4** | **5** |
| **(A)** யும் **(B)** யும் மட்டும் சரி | **(B)** யும் **(C)** யும் மட்டும் சரி | **(C)** யும் **(D)** யும் மட்டும் சரி | **(A)** யும் **(C)** யும் மட்டும் சரி | ஒரு விடை மட்டும் அல்லது **இரண்டிற்கு மேற்பட்ட** விடைகள் சரி |

**26. தாதுசேனனின் ஆட்சிக்காலம் பற்றிய குறிப்புகளில் எது / எவை சரியானது / சரியானவை?**
(A) ஆறு தமிழர்களின் ஆட்சிக்குப் பின்பு தாதுசேனன் அரச பதவி பெற்றான்.
(B) லம்பகண்ண வம்சத்து அரசர்களில் ஒரு முக்கியமானவனாக தாதுசேனன் கருதப்படுகின்றான்.
(C) தாதுசேனன் கலா வாவியினைக் கட்டினான்.
(D) தாதுசேனனின் ஆட்சிக் காலத்தில் தம்மதாதுவை இலங்கைக்கு கொண்டு வந்தனர். (.........)

**27. சீகிரியா தொடர்பான மேல்வரும் குறிப்புகளில் சரியானது / சரியானவை எது / எவை?**
(A) சீகிரிய முதலாம் காசியப்பனின் ஆட்சித் தளமாகும்.
(B) முதலாம் காசியப்பன் சீகிரியாவின் உச்சியிலே ஓர் உன்னதமான அரண்மனையைக் கட்டினான்.
(C) அழகாபுரியிற் குபேரன் இருந்ததைப் போல முதலாம் காசியப்பன் வாழ்ந்தான் என்று மகாவம்சம் குறிப்பிடுகின்றது.
(D) பிற்காலத்தில் சீகிரிய தேரவாத பிரிவெனாவில் ஒரு நிலையமாகியது. (.........)

**28. போர்த்துக்கேயரின் சமயக் கொள்கை தொடர்பாக மேல்வருவனவற்றுட் சரியானது / சரியானவை எது / எவை?**
(A) போர்த்துக்கேயர் இலங்கையிலே கத்தோலிக்க சமயத்தை பிரசாரம் செய்தார்கள்.
(B) போர்த்துக்கேயரின் சமய நடவடிக்கைகளில் பிரான்சிஸ்கள், யெசூற் குருமார்கள் முக்கிய பங்கினைக் கொண்டிருந்தனர்.
(C) போர்த்துக்கேயரின் வற்புறுத்தலினால் ஏழாம் புவனேகபாகு கத்தோலிக்க சமயத்திற் சேர்ந்து கொண்டான்.
(D) வண குவேறோஸ் பாதிரியார் கத்தோலிக்க சமயத்தைப் பரப்புவதற்கு இலங்கைக்கு வந்தார். (.........)

**29. கண்டி உடன்படிக்கை தொடர்பாக மேல்வரும் குறிப்புகளில் எது / எவை சரியானது / சரியானவை?**
(A) பிரித்தானிய தேசாதிபதிக்கும் கண்டிப் பிரதானிகளுக்கும் இடையிலே பரீட்சார்த்த கண்டி உடன்படிக்கை கைச்சாத்திடப்பட்டது.
(B) இந்த உடன்படிக்கை மூலம் கண்டி சிம்மாசனத்தின் மீதான உரிமை நாயக்கர்களுக்கு மறுக்கப்பட்டது.
(C) உடன்படிக்கையின் ஐந்தாவது உறுப்புரை மூலம் பௌத்த சமயத்துக்குப் பாதுகாப்பு வழங்குவதென்று பிரித்தானியர் உறுதியளித்தனர்.
(D) கண்டி உடன்படிக்கைச் சாசனத்தை ஜோன் டேவி உருவாக்கினார். (.........)

**30. குறூ - மக்கலம் சீர்திருத்தங்கள் தொடர்பாக மேல்வரும் கூற்றுகளில் எது / எவை சரியானது / சரியானவை?**
(A) கல்வித் தகைமை பெற்ற இலங்கையர் சார்பாக சட்டசபைக்கு ஒரு பிரதிநிதியைத் தெரிவு செய்தமை
(B) இனவாரிப் பிரதிநிதித்துவத்தின் தொடர்ச்சி
(C) சட்டசபைக்கு நிதி தொடர்பான அதிகாரங்கள் வழங்கப்பட்டமை
(D) நிர்வாகசபை அமைக்கப்பட்டமை (.........)

● **31 - 35** வரையுள்ள எல்லா வினாக்களிலும் சரியான விடையைத் தெரிவுசெய்து, அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டின் மீது** எழுதுக.

**31. அபயவாவியைக் கட்டிய அரசன் யார்?**
(1) பண்டுவாசுதேவ (2) பண்டுகாபய (3) தேவநம்பிய தீசன்
(4) வசபன் (5) முதலாம் உபதிஸ்ஸ (.........)

**32. மகிந்ததேரரின் வருகையினை உறுதிப்படுத்தும் கல்வெட்டு யாது?**
(1) ரஜகல கல்வெட்டு (2) தோணிகல கல்வெட்டு (3) பெருமியன் குளக் கல்வெட்டு
(4) பாளு மகிச்சாவ கல்வெட்டு (5) கோட்டபாய கல்வெட்டு (.........)

[பக். 6 ஐப் பார்க்க

**33.** **தம்பதெனியாவின் முதலாவது அரசன் யார்?**
(1) இரண்டாம் விஜயபாகு
(2) மூன்றாம் விஜயபாகு
(3) இரண்டாம் பராக்கிரமபாகு
(4) முதலாம் புவனேகபாகு
(5) நான்காம் பராக்கிரமபாகு
(........)

**34.** **ரன்தெனிவெல போரிலே கொலையுண்ட போர்த்துக்கேயப் படைத்தலைவர் யார்?**
(1) பேத்ரோ லோபேஸ் டி சூசா
(2) ஜெரனிமோ டி அசெவேடா
(3) கொன்ஸ்ரன்றினோ டி சா டி நொறஞ்சா
(4) தியோகோ டி மெலோ டி கஸ்ரோ
(5) பிரான்ஸிஸ்கோ டி மெலோ டி காஸ்ரோ
(........)

**35.** **1848 ஆம் ஆண்டு கிளர்ச்சிக் காலத்தில் இலங்கையிலிருந்த காலனித்துவ அரசாங்கத்தின் செயலதிபர் யார்?**
(1) ஜேம்ஸ் சதலர்ண்ட்
(2) பிலிப் அன்ஸ்றூதர்
(3) வைகொப் ரொரிங்டன்
(4) எமர்சன் ரெனன்
(5) ஜோர்ஜ் ரேனர்
(........)

- **36 - 40** வரையுள்ள வினாக்களில் இரண்டு கூற்றுகள் வீதம் தரப்பட்டுள்ளன. ஒவ்வொரு வினா தொடர்பாகவும் உள்ள கூற்றுச் சோடிக்குக் கீழே உள்ள அட்டவணையில் காணப்படும் **1, 2, 3, 4, 5** என்பனவற்றில் மிகவும் பொருந்துவது எதுவென்பதைத் தெரிந்து அதன் **இலக்கத்தை அடைப்புப் புள்ளிக் கோட்டில்** எழுதுக.

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று |
|---|---|---|
| 1 | சரியானது | பிழையானது |
| 2 | சரியானது | சரியானது |
| 3 | பிழையானது | பிழையானது |
| 4 | பிழையானது | சரியானது |
| 5 | சரியானது | சரியானதும் **முதலாம்** கூற்றினை நன்றாக விளக்குவதுமாகும். |

| | முதலாம் கூற்று | இரண்டாம் கூற்று | |
|---|---|---|---|
| **36.** | அசோகச் சக்கரவர்த்தியின் ஆதரவோடு அரசனாக அபிஷேகம் செய்யப்பட்ட பின்பு தீசன், தேவநம்பிய என்ற பட்டத்தைச் சூடிக் கொண்டான். | ஸ்ரீ மேகவண்ணனுடைய காலத்தில் புனித தந்ததாது இலங்கைக்கு கொண்டு வரப்பட்டது. | (........) |
| **37.** | ‘அதிக புண்ணியங்களையும் பாவங்களையும் தேடிக் கொண்டான்’ என்பது மகாசேனன் பற்றிய மகாவம்சக் குறிப்பு | மகாவிகாரையை அழித்த போதிலும் மகாசேனன் பிரமாண்டமான யேத்தவன தாதுகோபத்தையும் மின்னேரி முதலான பல பெருங்குளங்களையும் கட்டினான். | (........) |
| **38.** | கோப்பிட்டிகம என்னும் இடத்தில் இருந்த வியாபார நிலையம் பற்றிய விவரங்களை வேவல்கட்டிய கல்வெட்டு கொண்டுள்ளது. | உத்தராராம என்பதை நிசங்கமல்லன் கட்டினான் என்று கருதப்படுகின்றது. | (........) |
| **39.** | ஒல்லாந்தர் இலங்கையில் அச்சு இயந்திரத்தை முதன்முதலாக அறிமுகஞ் செய்தனர். | இரண்டாம் இராஜசிங்கன் கத்தோலிக்கர் எல்லோரையும் கண்டி இராச்சியத்திலிருந்து வெளியேற்றினான். | (........) |
| **40.** | D. B. ஜயதிலக அரச சபை (State council) இன் முதலாவது சபாநாயகராக விளங்கினார். | 1975 ஆம் ஆண்டு திருமதி பண்டாரநாயக்கா தலைமையிலுள்ள அரசாங்கம் பெருந்தோட்டங்களைத் தேசிய மயப்படுத்தியது. | (........) |

* *

[பக். 7 ஐப் பார்க்க

5174





அධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

ඉතිහාසය I (II කොටස)
வரலாறு I (பகுதி II)
History I (Part II)

25 T I

## இலங்கை வரலாறு - ஆதி காலம் முதல் கி.பி. 1978 வரை

**அறிவுறுத்தல்கள்:**

* **முதலாம்** வினாவுக்கும் வேறு ஏதாவது **மூன்று** வினாக்களுக்கும் விடை எழுதுக.
(**முதலாம்** வினாவுக்கு விடை அளிப்பதற்கு **இலங்கையின் புறவுருவப்படம்** வழங்கப்படும்.)

### பகுதி II

1. உமக்கு வழங்கப்பட்ட புறவுருவப்படத்திலே மேலே தரப்பட்ட **இடங்கள் எல்லாவற்றையும் குறித்துப் பெயரிட்டு**, அவற்றுள் எவையேனும் **இரண்டினைப்** பற்றிச் சுருக்கமான வரலாற்றுக் குறிப்புகள் எழுதுக.
   - (i) ஜம்புகோள பட்டணம்
   - (ii) யான் ஓயா
   - (iii) சேருவில
   - (iv) யோத வாவி
   - (v) யாப்பகூவ
   - (vi) தெவிநுவர
   - (vii) நீர்கொழும்பு
   - (viii) மத்திய மாகாணம்

   *(சரியாகக் குறித்துப் பெயரிட்ட ஒவ்வொன்றுக்கும் **01** புள்ளி; சிறுகுறிப்பு ஒவ்வொன்றுக்கும் **05** புள்ளிகள்)*

2. பன்னிரண்டாம் நூற்றாண்டு முடியும் வரையான காலத்தில் இலங்கை வரலாற்றைப் படித்துக் கொள்வதில் மேல்வருவனவற்றுக்குரிய முக்கியத்துவத்தைப் பரிசீலனை செய்க.
   - (i) சாசனங்கள்
   - (ii) தொல்பொருட் சின்னங்களும் அழிபாடுகளும்
   - (iii) நாணயங்கள் *(14 புள்ளிகள்)*

3. அநுராதபுர காலத்துப் பொருளாதார முறையின் பிரதானமான அம்சங்களை மேல்வரும் தலைப்புகள் தொடர்பாகப் பரிசீலனை செய்க.
   - (i) விவசாயமும் நீர்ப்பாசனமும்
   - (ii) வாணிபம் *(14 புள்ளிகள்)*

4. "முதலாம் விஜயபாகு, முதலாம் பராக்கிரமபாகு ஆகியோர் பொலன்னறுவைக் காலத்து மன்னர்களில் முதன்மையானவர்கள்."
   - (i) அரச பதவி பெறுவதற்கு முன்பு முதலாம் விஜயபாகு கொண்டிருந்த பெயர் யாது? *(01 புள்ளி)*
   - (ii) முதலாம் பராக்கிரமபாகுவின் தாய் தந்தையரின் பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   - (iii) இம்மன்னர்கள் இருவரும் பௌத்த சமயத்துக்கு ஆற்றிய பணிகளைச் சுருக்கமாகக் குறிப்பிடுக. *(04 புள்ளிகள்)*
   - (iv) முதலாம் விஜயபாகு, முதலாம் பராக்கிரமபாகு ஆகியோரின் அரசியற் சாதனைகளை ஒப்பிட்டு ஆராய்க. *(07 புள்ளிகள்)*

5. "ஆறாம் பராக்கிரமபாகு இலங்கை முழுவதையும் இணைத்த இறுதி அரசன் எனக் கருதப்படுகின்றான்."
   - (i) ஆறாம் பராக்கிரமபாகுவின் இராசதானி யாது? *(01 புள்ளி)*
   - (ii) ஆறாம் பராக்கிரமபாகுவின் ஆட்சிக்காலத்தில் வாழ்ந்த **இரண்டு** பிரதானமான பிக்குகளின் பெயர்களைக் குறிப்பிடுக. *(02 புள்ளிகள்)*
   - (iii) ஆறாம் பராக்கிரமபாகுவின் காலத்து கல்வி நிலைகளைப் பற்றி ஒரு சுருக்கமான குறிப்புரை எழுதுக. *(03 புள்ளிகள்)*
   - (iv) ஆறாம் பராக்கிரமபாகுவின் காலத்தில் இலங்கை அரசியல் ரீதியாக இணைக்கப்பட்டமையிலுள்ள பிரதான கட்டங்களை விவரிக்குக. *(08 புள்ளிகள்)*

[பக். 8 ஐப் பார்க்க

**6.** அரசியல், பண்பாடு ஆகிய துறைகளில் கீர்த்தி ஸ்ரீ ராஜசிங்கன் ஏற்படுத்திய சாதனைகளை மதிப்பீடு செய்க. *(14 புள்ளிகள்)*

**7.** பத்தொன்பதாம் நூற்றாண்டின் பின்னரைப் பகுதியில் ஏற்பட்ட பண்பாட்டு மறுமலர்ச்சி தொடர்பான மேல்வரும் தலைப்புகளில் ஏதேனும் **ஒன்றைப்** பற்றி ஆராய்க.

(i) பௌத்த சமய மறுமலர்ச்சி *(14 புள்ளிகள்)*

(ii) இந்து சமய, இஸ்லாமிய மறுமலர்ச்சி *(14 புள்ளிகள்)*

**8.** **(A)** பகுதிக்கு **அல்லது** **(B)** பகுதிக்கு மட்டும் விடை எழுதுக.

**(A)** சோல்பரி அரசியலமைப்பின் பிரதானமான அம்சங்களைப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

**(B)** 1972 ஆம் ஆண்டு குடியரசு அரசியலமைப்பின் பிரதானமான அம்சங்களைப் பரிசீலனை செய்க. *(14 புள்ளிகள்)*

**9.** மேல்வருவனவற்றுள் எவையேனும் **இரண்டின்** வரலாற்று முக்கியத்துவம் பற்றிச் சுருக்கமான குறிப்புகள் எழுதுக.

(i) அநுராதபுர காலத்துத் தென்னிந்தியப் படையெடுப்புகள்

(ii) கம்பளை இராச்சியம்

(iii) யாழ்ப்பாண இராச்சியமும் போர்த்துக்கேயரும்

(iv) கரையோர மாகாணங்களில் ஒல்லாந்தர் கடைப்பிடித்த பொருளாதாரக் கொள்கை

(v) பத்தொன்பதாம் நூற்றாண்டிற் பிரித்தானியர் ஆட்சியிற் கோப்பிப் பெருந்தோட்டங்கள்

(vi) இலங்கைத் தேசிய காங்கிரஸ்

*(ஒவ்வொன்றுக்கும் 07 புள்ளிகள் வீதம்)*

***

අධ්‍යයන පොදු සහතික පත්‍ර (උසස් පෙළ) විභාගය, 2017 අගෝස්තු
கல்விப் பொதுத் தராதரப் பத்திர (உயர் தர)ப் பரீட்சை, 2017 ஓகஸ்ற்
General Certificate of Education (Adv. Level) Examination, August 2017

| | | | |
|---|---|---|---|
| ඉතිහාසය I<br>வரலாறு I<br>History I | 25 | T |

ප්‍රශ්න අංකය / வினா இல. / Question No. } 1

විභාග අංකය / சுட்டெண் / Index No. } ……………………………

